# செங்குந்தர் மகாஜன சங்கம்
## திருநெல்வேலி மாநகரம்




# தகவலேடு - 8

2014 ஆகஸ்ட் - 2018 ஜூலை முடிய

## செங்குந்தர் உறுதிமொழி



வாழ்க வாழ்க செங்குந்தம் வெல்க வெல்க செங்குந்தம்

நம் செங்குந்த குலக்கடவுள் முருகப் பெருமான் ஆணையாக, மனசாட்சியுடன் கீழ்க்கண்டவாறு உறுதி ஏற்கிறோம்.

1. நமது நாட்டின் அரசியல் அமைப்புச் சட்ட திட்டங்களுக்கு கட்டுப்பட்டு நடப்போம்.
2. நமது சங்கத்தின் சட்டதிட்டங்களுக்குக் கட்டுப்பட்டு சமுதாய முன்னேற்றத்திற்குப் பாடுபடுவோம்.
3. நாம் மற்ற இனத்தவரிடம் மனித நேயம் கொண்டு பழகுவோம்.
4. நமது உரிமைகளைப் பாதுகாக்க விழிப்புடன் செயல்படுவோம்.
5. சங்கம் நிறுவிய சான்றோர்களை நினைவில் கொண்டு சங்கத்தை நாளும் வளர்த்திடுவோம்.

**செங்குந்தர் மகாஜன சங்கம்**
**திருநெல்வேலி மாநகரம்**

## செங்குந்தர் இனத்தில் கால்பதித்து சமூகம் அனைத்துக்கும் பொதுவாகி முத்திரை பதித்த சான்றோர்கள்


ஒட்டக்கூத்தர்

"கல்விக்கரசு கவிராச சிங்கம் கலைச் சலதி
வில்லிக்கும் வாட்கை அபயர் சஞ்சீவி, விமல மூர்த்தி
புல்விக்கும் ஆகமப் பொக்கசம், வேதப்புயல் கமலச்
செல்விக்குச் சேய் ஒட்டக் கூத்தனல்லாற் புவி
செப்பரிதே"

(கலித்துறைமாலை)


பாவேந்தர் பாரதிதாசன்

"தமிழுக்கும் அமுதென்று பேர்"
புரட்சிக்கவிஞர்


திருமுருக கிருபானந்த வாரியார் சுவாமிகள்

திருப்பணிச் சக்கரவர்த்தி, முத்தமிழ் வித்தகர்,நம்குல குரு, 64வது நாயன்மார்


வேதாத்ரி மகரிஷி

புதிய பண்பாடு உலகுக்கு வேண்டும் என விரும்பி வகுத்தவர்.


பேரறிஞர் அண்ணா

"ஏழையின் சிரிப்பிலே இறைவனைக் காண விரும்புகிறேன்." மக்களுக்கு உழைத்திட்ட மாமனிதர்.

1

### செங்குந்தர் குலச் சான்றோர்கள்
### நகராட்சி உறுப்பினர்களாக இருந்து சேவை செய்தவர்களும் சேவை செய்து வருபவர்களும்

| | |
|---|---|
| | தெய்வத்திருவாளர்கள் |
| டவுண் | திருக்கோட்டீஸ்வர முதலியார், |
| | திருமதி. சந்தோஷம் அம்மாள் |
| | திரு. APT. முருகேச முதலியார் |
| | மொந்தை திரு. சுப்பிரமணிய முதலியார் |
| பாட்டப்பத்து | பூமிவிலாஸ் S. ராமசாமி முதலியார், |
| டவுண் | வை. பழனி முதலியார், |
| பழையபேட்டை | இ. வடிவேல் முதலியார், |
| பழையபேட்டை | ச. முத்தையா முதலியார், |
| | தண்டபாணி, |
| டவுண் | திரு. சண்முகவேலாயுத முதலியார், |
| | திரு. R. முத்துக்குமார், |
| | திரு. A. பாலசுப்பிரமணியம் |
| | திருமதி J. இராஜேஸ்வரி, |
| | திரு. S.N. சரவணன். |

### வாகையடிமுக்கு திருநெல்வேலி நெசவாளர் கூட்டுறவு சங்கம்
### தலைவர்கள்

| | |
|---|---|
| தெய்வத்திரு. டாக்டர் திரு. இராமசாமி முதலியார் | பெரியதெரு |
| தெய்வத்திரு. திரு. பால்வண்ண முதலியார் | பழையபேட்டை |
| தெய்வத்திரு. இ. வடிவேல் முதலியார் | பழையபேட்டை |
| தெய்வத்திரு. R.S. பாடகலிங்க முதலியார் | வேம்படித்தெரு |
| தெய்வத்திரு. ப. முருகேச முதலியார் | பாட்டப்பத்து |
| தெய்வத்திரு. S. நாராயணன் | வேம்படித்தெரு |
| திரு. ASSR. இசக்கி முதலியார் | நடுத்தெரு |
| திரு. N. வடிவேல் | பாட்டப்பத்து |

### பழையபேட்டை நெசவாளர் கூட்டுறவு சங்கம்
### தலைவர்கள்

திரு. இ. வடிவேல் முதலியார், திரு. L. முத்தையா முதலியார்,
திரு. B. கணபதி முதலியார், திரு. M. திருமலை முதலியார்,
திரு. வெயிலானந்தம் முதலியார்.

### ஜோதிடம்

தெய்வத்திரு. ஜோதிடக் களஞ்சியம் கு. பழனியாண்டி முதலியார்



### சுதந்திர போராட்டத்தில் நேரடியாக ஈடுபட்டவர்கள்

தியாகி. V.S. சங்கர சுப்பிரமணியன்,
தியாகி. அங்கப்ப முதலியார்,
தியாகி. பெருமாள் முதலியார்,
தியாகி. மகாலிங்கம் முதலியார்,
தியாகி. காந்தி முதலியார்.

### ஆங்கிலேயர் ஆட்சி காலத்தில் நீதிமன்ற ஜீரிகளாக இருந்தவர்கள்

தெய்வத்திரு. திருக்கோட்டீஸ்வர முதலியார்,
தெய்வத்திரு. க.ச.பொ. கனகசபை முதலியார்,
தெய்வத்திரு. சங்கரகுமார் முதலியார்,
தெய்வத்திரு. தனுஷ்கோடி முதலியார்.

### நூல் ஆசிரியர்கள்

திரு. T.B. கிருஷ்ணசாமி முதலியார்,
தமிழ் பேராசிரியர். ச. கணபதி முதலியார்,
V.S. சங்கரசுப்பிரமணிய முதலியார்
வித்துவான் பெ. சுப்பையா பாரதி,
புலவர். ஆ. பழனியாண்டி,
முனைவர். நெல்லை. க. சுப்பிரமணியன்.

### பாவேந்தர் பாரதிதாசன் கல்வி அறக்கட்டளை உறுப்பினர்கள்

திரு. பழ. மாணிக்கவாசகம் - தலைவர்
திரு. ச. நெல்லையப்பன் - துணைத் தலைவர்
திரு. சுபா சங்கர் - பொருளாளர்
திரு. ப. கணபதி
திரு. மா. பாடகலிங்கம்
திரு. S. ராமமூர்த்தி
திரு. ப. பாலசுப்பிரமணியன்
திரு. ச. பழனியப்பன்
திரு. சோலைமணியன்

வந்திருக்கிறது. நமது செங்குந்தர் நெசவாளர்களை, நெசவாளர் கூட்டுறவு சங்கத்தில் உறுப்பினராக்கி அவர்களுக்கு நியாயமான விலையில் நூல்கள் கிடைக்கச் செய்து உதவியிருக்கிறார்கள். **திரு. ஆ. பழனியாண்டி முதலியாரும்** நண்பர்களும் நம் குலமக்களுக்கு சுதந்திர உணர்வை ஊட்டும் வகையில் காந்திஜியின் கொள்கைகளை விளக்கும் வகையிலும் நெசவாளர்களின் கஷ்டங்களைத் தொகுத்தும் "நெசவாளியின் துயரம்" என்னும் நாடகத்தை பெரியதெருவில் வைத்து நடத்தியும் நாடகத்தில் நடித்தும் உள்ளார்கள். வெளியூர்களிலும் நடத்தியிருக்கிறார்கள். திரு.V.S. **சங்கரசுப்பிரமணிய முதலியார்** முனிசிபல் சேர்மன் அவர்களின் ஆலோசனையின் பேரில் நெசவாளர் கூட்டுறவு சங்கத்தின் தலைவர்களாக இருந்த **ராமசாமி முதலியார், பால்வண்ண முதலியார், வடிவேல் முதலியார்** செங்குந்தர்களுக்கு உதவிகள் செய்திருக்கிறார்கள். திருநெல்வேலி நகராட்சி உறுப்பினராக இருந்த **திருமதி. சந்தோஷம் அம்மாளும், திருமதி. கோகிலா அம்மாளும்** செங்குந்தர் மாநில மகளிர் மாநாட்டுக்கு தலைமையேற்று நடத்தியிருக்கிறார்கள். **ஆசிரியர் திரு. அருணாசல முதலியார் தலைவராகவும், திரு. ச. கணபதி செயலாளராகவும், மாநில செயலாளராகவும்** இருந்து நமது செங்குந்தர் குலமக்களுக்கும், மாணவ/மாணவிகளுக்கும் கல்வி, வேலைவாய்ப்புக்கும் உதவி புரிந்திருக்கிறார்கள். திரு V.S.S. அவர்கள் திருநெல்வேலியில் கூட்டுறவு நூற்பாலை அமைவதற்கும், ஆலையில் நமது செங்குந்தர்கள் வேலை பெறவும் உதவி செய்திருக்கிறார்கள். இந்த காலகட்டத்தில் பூமிவிலாஸ் S. **ராமசாமி முதலியார்** நகர்மன்ற உறுப்பினரான பின், நகராட்சி நியமனக்குழு உறுப்பினராக்கப்பட்டிருந்தார். அவர்கள் தகுதியான நமது செங்குந்தர்களை தேடித்தேடி, நகராட்சி துறையிலும், ஆசிரியர் பணிகளிலும் வேலையில் அமர்த்த



உதவியிருக்கிறார்கள். 1936 - 1937ல் பெரியதெரு **திரு பி.எஸ். சித்திரபுத்திர முதலியார்** சமுதாய பொருளாதாரத் தொண்டுமன்ற செயற்குழு உறுப்பினராக இருந்து செங்குந்தர்களுக்கு சேவை செய்திருக்கிறார்கள். **திரு. பாலசுப்பிரமணியம், திரு C. அருணாசல முதலியார், திரு. ச. கணபதி, திரு. மு. துரைராஜ், திரு R.S. பாடகலிங்கம், திரு. இ. நமசிவாயம், திரு. ப. கணபதி** ஆகியவர்கள் செங்குந்தர் மகாஜன சங்கத் தலைவராகவும், தற்போது **திரு. பழ. மாணிக்கவாசகம்** மாநகர மற்றும் மாவட்டத் தலைவராக இருந்து செங்குந்தர் இளைஞர்கள், மகளிர்கள் அவர்களுக்கான அமைப்பு மூலம் செங்குந்தர்கள் அனைவரையும் ஒருங்கிணைக்கும் பணியில் ஈடுபட்டு வருகிறார்கள். செங்குந்தர்கள் அனைவரும் ஓரணியில் திரள்வோம்.


திருப்பூர் குமரன்

இந்திய தேசிய விடுதலை போராட்டத்தில் சட்ட மறுப்பு இயக்கப் பேரணியில் பங்கு கொண்டார். நமது இந்திய கொடிக்காக உயிர் நீத்தவர்.


தில்லையாடி வள்ளியம்மை

இந்தியவருக்கு தலைவரி, இந்தியத் திருமணங்கள் செல்லாது என தென்னாப்பிரிக்க அரசு ஆணையிட்டதை எதிர்த்து காந்தியடிகள் நடத்திய அறப் போராட்டத்தில் 15 வயதில் பங்கேற்றவர். கைது செய்யப்பட்டு நோய்வாய்ப் பட்டு 16 வயதில் காலமானார்.

**இந்திய ஒப்பீனியன் நாழிதழில் காந்தியடிகள் செய்தி :**

"இந்தியாவின் புனித மகள் இறந்து விட்டாள். மாதர்களுக்கு அணிகலன்களாகத் துன்பத்தையும், சகிக்கும் மனோபாவம், தன்மானம், நல்லொழுக்கம் ஆகியவற்றுக்கு முன் உதாரணமாகத் திகழ்ந்தவர். அவருடைய உதாரணம் இந்தியச் சமுதாயத்தில் வீண்போகாது என்று நம்புகிறேன்."

அரியவற்றுள் எல்லாம் அரிதே பெரியோரைப்
பேணித் தமராக்கொளல்

**நம்குலச் சான்றோர்களை வணங்குகிறோம்.**
**என்றும் நினைவிற் கொள்வோம்.**
**அவர் வழி நடப்போம்.**
**அனைவர்க்கும் தொண்டு செய்வோம்.**



# செங்குந்தர் பிரபந்தத் திரட்டு

## செங்குந்தர் சிறப்பு

"நிலை தந்தாருல கினுக்குள் யாவருக்கும்
மானமதை நிலைக்கத் தந்தார்
கலைதந்தார் வணிகருக்குச் சீவனஞ் செய்
திடவென்றே கையிற் தந்தார்
விலைதந்தார் தமிழினுக்குச் செங்குந்தர்
என்கவிக்கே விலையாகத் தம்
தலை தந்தார் எனக்கு ஒட்டக்கூத்தன் எனப்
பெயரினையுந் தரத்தந்தாரே"

-எழுப்பெழுது - ஒட்டக்கூத்தர்

## ஈட்டி எழுபது

"இந்திரன் அயன் மால்தேவர் யாவர்க்கும் முதன்மையாக வந்த பான்மையினால் சூலமழுப்படை அத்தனார்க்கு முந்திய நாமம் தானும் முதலியர் ஆகையால் செங்குந்தர் சந்ததிக்கும் அப்பேர் முதலியர் என்று கூறும்."

-எழுப்பெழுது - ஒட்டக்கூத்தர்

## செங்குந்தர் பிள்ளைத் தமிழ்

"மாவடியிலே விளங்கும் வல்லிகாமாட்சித் தாய்
சேவடியிலே உதித்தார் செங்குந்தர் அம்மானை
பசித்தவருக் கன்னமிடப் பசவாரோ அம்மானை"

இந்தக் கைக்கோளார் இசைக்கெண் கணன் படைத்த
எந்தக் கைக்கோளார் இணை ஆவாரோ"

## செங்குந்தர் குலமாட்சி

"உலத்தினிற்புட்ப ராகம் ஒளியினில் கதிராம், ஐந்து
புலத்தினிற் கருங்கண் வாவிப்பூவிற்கமலம் சொல்லும்
குலத்தினிற் செய்ய குந்தம் குன்றினின் மேருக்குன்றம்
தலத்தினின் மதுரை மேலாந் தரமெனுந் தகைமைத்தம்மா"

"கோக்களை மின்ன னாரைத் தவத்தரைக் குலத்தில் வேத
மாக்களைச் சிசுவைக் கொன்றான் செய்ந்நன்றி மறந்தான் ஆசான்
ஆக்கம தழித்தான் பாவமனைத்தும் செங்குந்தர் வீதி
தேக்கிடப்பிச்சை வாங்கி உண்டிடத் தீருமன்றே"

"கைக்கோளார் தமக்கு நிந்தை கனவிடைச் செய்தபேர்கள்
மக்களும் மாரும்தோற்று மனைவியும் பொருளும் தோற்றுக்
கைக்குள்ளே அன்னம் ஏந்திக் காட்டகம் எங்கும் சுற்றித்
தக்கபேர் நமனுக் காளாய்த் தாம் நரகெய்து வாரே"

### வாழ்த்து

"சோணாட்டு முதலியெச் சொலவந்த செங்குந்தர் தொகுதிமொழி
நாணாளும் அவர்செய்த நற்றருமம் இத்தாரை மேல் நன்குவாழி
காணாத காட்சியெலாங் காட்டியருள் கந்தப்பன் கருணைவாழி
மாணாரும் வடிவேலும் மயிலும் இரு மாதர்களும் வாழி வாழி

## செங்குந்தர் சிறப்பு

**63 நாயன்மார்களில் நம்மவர்கள்**

மெய்ப் பொருள் நாயனார்
எறிபதித்த நாயனார்
பெருமிழலைக் குறும்ப நாயனார்
திருமூல நாயனார்
தண்டியடிகள் நாயனார்
கூற்றுவ நாயனார்
நரசிங்க முனையரைய நாயனார்
சத்தி நாயனார்
கணம்புல்ல நாயனார்
காரிநாயனார்
முனையடுவார் நாயனார்
இடங்கழி நாயனார்
செருத்துணை நாயனார்
கோட்புலி நாயனார்
இவர்களைத் தொடர்ந்து 64வது நாயன்மார் இவரே திருமுருக கிருபானந்த வாரியார் சுவாமிகள்

**நம்குலத் தமிழ்ப் புலவர்கள் சான்றோர்கள்**

ஒட்டக்கூத்தர்
படிக்காசுப் புலவர்
இரட்டைப் புலவர்
பொய்யா மொழிப் புலவர்
பகழிக் கூத்தர்
காங்கேய முனிவர்
சிதம்பர சுவாமிகள்
சச்சியப்ப முனிவர்
கோனாியப்ப நாவலர்
அருணாசல சுவாமிகள்
காஞ்சி நாகலிங்கர்
ஞானியாரடிகள்
திருமுருக கிருபானந்த வாரியார்
பாவேந்தர் பாரதிதாசன்
புதுக்கவிதை ஈரோடு தமிழன்பன்
முனைவர். நெல்லை. க. சுப்பிரமணியன்
சினிமா பாடலாசிரியர் பா. விஜய்
இன்னும்

## தென்னிந்திய செங்குந்த மகாஜன சங்கத் தலைவர்கள்

1. தெய்வத்திரு. V. **நடராஜ செங்குந்தர்,** B.A. B.L.,
   சென்னை இந்து அறநிலைய ஆணையர்
   29-4-27 முதல் 19-1-29 வரை
2. தெய்வத்திரு. **ஆ.வே. முத்தையா செங்குந்தர்,** B.A. B.L.,
   புதுவை பிரெஞ்ச் அரசாங்கத்தின் இந்திய அமைச்சர்
   20-1-29 முதல் 23-2-1936 வரை
3. தெய்வத்திரு. **வள்ளல் தி.நா. சபாபதி செங்குந்தர்,**
   திருவாரூர். 23-2-36 முதல் 24-9-53 வரை
4. திரு. **இராம. சம்பந்தமூர்த்தி செங்குந்தர்,**
   மஞ்சுக் கொல்லை - நாகப்பட்டினம்
   25-9-53 முதல் 1955 வரை
5. தெய்வத்திரு. K.A. **சண்முக செங்குந்தர்,**
   திருப்பத்தூர். 1955 முதல் 25-12-1976 வரை
6. தெய்வத்திரு. பத்மஸ்ரீ M.P. **நாச்சிமுத்து செங்குந்தர்,** B.A. B.L.,
   சென்னிமலை. 26-12-76 முதல் 26-6-87 வரை
7. உத்தியோகரத்னா நெசவாளர் நேசன்
   தெய்வத்திரு. J. **சுத்தானந்தன்,** B.Sc.,
   சென்னிமலை. 27-6-87 முதல் 26.6.2010 வரை
8. திரு. **பெண்ணாடம் ஆ. ராஜவேலு,**
   கடலூர். 2010 முதல் 23-2-2014 வரை
9. திரு. K.P.K. **செல்வராஜ,**
   திருப்பூர். 23-2-14 முதல்

### சங்கம் நிறுவிய சான்றோர்கள்

**காஞ்சிபுரம் வண்ணக் களஞ்சியம் நாகலிங்க முதலியார்,**
**மயிலாப்பூர் திரு. கா. வேலு முதலியார்,**
**(அக்கவுண்டன்ட் ஆபிஸ் கண்காணிப்பாளர்)**
**காஞ்சிபுரம் ம.த. சாமிநாத முதலியார்,**
**பொருள் வைத்த சேரி - நாகை நல்லமுத்து முதலியார்,**
**திருவாரூர் வள்ளல் தி.நா. சபாபதி செங்குந்தர்.**

**வணங்குகிறோம்**

**உங்கள் பாதையில் பயணம் ஏற்கிறோம்**
**நம் குழந்தைகள் நல்ல கல்வி கற்கவும்**
**சமூகத்திற்கு தொண்டு செய்யவும்**
**மனிதநேயம் மிக்க மானுடராகவும் உயர்த்திடுவோம்.**



## திருநெல்வேலி செங்குந்தர் வரலாறு

1938 ல் திருநெல்வேலி பழைய பேட்டையில் செங்குந்தர் வாலிபர் சங்கத்தை **திருவாளர்கள் ஆ. பழனியாண்டி முதலியார், சிலுவைமுத்து முதலியார் மகன் கணபதி, கீழப்பாவூர் காளியப்பன் மற்றும் நண்பர்களுடன்** சேர்ந்து ஆரம்பித்திருக்கிறார்கள். கணபதி முதலியார் அவர்களுக்குச் சொந்தமான தோட்டத்தில் வளையம், பார் விளையாட்டு மற்றும் குஸ்தி, விளையாட்டுகளில் ஈடுபட்டும், இளைஞர்களை விளையாட்டில் ஊக்குவித்தும், அவ்வப்போது செங்குந்த பெரியவர்கள் சொல்லியபடி செங்குந்தர்களுக்கு உதவியும் செய்து வந்திருக்கிறார்கள். பின்னர் இந்த சங்கத்தில் **இ. வடிவேல் முதலியார், செக்கடி சுப்பிரமணிய முதலியாரும்** சேர்ந்து நடத்தியிருக்கிறார்கள்.

1927ம் ஆண்ட தோற்றுவிக்கப்பட்ட தென்னிந்திய செங்குந்த மகாஜன சங்கம் 1938ல் சங்கத்தை பதிவுசெய்தபோது (பதிவு எண் 1,2 நாள் 9-12-38) திருநெல்வேலி VVSV. **சண்முக முதலியார்** வியாபாரம், அவர்களும் V.S. **சங்கர சுப்பிரமணிய முதலியார்** வக்கீல், சேர்மன் அவர்களும் அம்பை **தி. வேலாயுத முதலியார்** அவர்களும் செயற்குழு உறுப்பினர்களாகவும் தென்காசி T.P.K. **ஆறுமுக முதலியார்** பேங்கர் மிராசுதாரர் அவர்கள் சங்கத்தின் துணைத்தலைவராகவும் இருந்திருக்கிறார்கள். 1941ல் திருநெல்வேலி நெசவாளர் கூட்டுறவு சங்கம் டாக்டர். **திரு. ராமசாமி முதலியார்** அவர்களைத் தலைவராகக் கொண்டு ஆரம்பிக்கப்பட்டிருக்கிறது. இந்த கால கட்டத்தில் திருநெல்வேலி செங்குந்தர் கைத்தறி நெசவாளர் சங்கம் என்ற அமைப்பு **திரு. ஆ. பழனியாண்டி முதலியார், கொட்டு பாலு முதலியார்** மற்றும் நண்பர்களாலும் தோற்றுவிக்கப்பட்டு அகஸ்தியர் கோவிலில் இயங்கி

நிகழ்வுகளோடு நமது சங்க ஆண்டு விழாவும் தலைவர் பழ. மாணிக்கவாசகம் தலைமையில் நடைபெற்றது. இந்நிகழ்ச்சியில் தலைமைச் சங்கத்தின் துணைத் தலைவர் திரு. பொ. சக்திமோகன், மாவட்டச் செயலாளரும் இளைஞர் அணி அமைப்பாளருமான திரு. P. மாரிமுத்து, பொருளாளர் சுப்பிரமணியம், தலைமைச் சங்க செயற்குழு உறுப்பினர்கள் திரு A.S. சுப்பிரமணியம், திரு. S. கல்யாண சுந்தரம், திரு. பிச்சையா மகளிரணி மண்டல அமைப்பாளர் திருமதி S. ராஜேஸ்வரி, இளைஞரணி பொறுப்பாளர்கள் கலந்துகொண்டனர். இந்நிகழ்வில் X ஆவது 28, XII ஆவது 16 மாணவர்களுக்கு ஊக்கப்பரிசும், ஒரு மாணவருக்கு தொழிற்பயிற்சி படிப்புக்கு முழு உதவித் தொகையும், 3 மாணவர்களுக்கு பகுதி உதவித் தொகையும் XI பயிலும் 17 மாணவ/ மாணவிகளுக்கு தலா ரூ.1000/- உதவித்தொகையும் வழங்கப்பட்டது. சாதனைச் சான்றோர்கள் திரு. G. மீனாட்சி சுந்தரம், கலைமகள் டெக்னிகல் இன்ஸ்ட்டியூட் நிறுவனர், திரு. நெ. அப்பாத்துரை பணிநிறைவு உதவி கோட்டப்பொறியாளர் அவர்களை துணைத்தலைவர் திரு. ச. நெல்லையப்பன் அவர்கள் பாராட்டிய பின் சான்றோர்களுக்கும், சிறப்பு விருந்தினருக்கும் நினைவுப் பரிசு வழங்கி சிறப்பிக்கப்பட்டார்கள். இந்நிகழ்ச்சியில் 600க்கும் மேற்பட்ட உறவினர்கள் கலந்து கொண்டனர்.

### மயானப்பராமரிப்பு :

கருப்பந்துரை செங்குந்தர் வனத்தில் சுற்றுச்சுவர் உயர்த்தப்பட்டும் மேற்கு பகுதி சுவர் அடைக்கப்பட்டும் - மின் பராமரிப்பு மேற்கொள்ளப்பட்டது. தரைத்தளம் பழுது நீக்கியது உட்பட ரூ.36,300/- செலவு செய்யப்பட்டிருக்கிறது. வீடு ஒன்றுக்கு ரூ.100/ - நிதி வழங்க வேண்டியிருந்தோம். நமது உறவினர்களிடமிருந்து நிதி பெறப்படாமல் உள்ளது. செயற்குழு உறுப்பினர்கள், இளைஞர், மகளிர் பொறுப்பாளர்கள், ஆர்வலர்கள் ஷ பணியினை செய்து முடிக்க ஒத்துழைப்பு நல்க வேண்டுகிறோம்.



செங்குந்தர் வளாகத்தின் அருகில் இருந்த பம்பினை சீர் செய்து வழங்கவும், நமது வனத்திற்குள் புதிதாக ஆழ்குழாய் கிணறு அமைத்து உயர் நீர் தேக்கும் தொட்டி அமைத்து தர பாளையங்கோட்டை சட்டமன்ற உறுப்பினர் மதிப்பிற்குரிய T.P.M. மைதீன்கான் அவர்களைச் சந்தித்து விண்ணப்பம் அளித்து கேட்டு கொண்டபடி அவர்கள் ஷ பணிக்கு ரூ.2 லட்சம் நிதி ஒதுக்கீடு அளித்திருக்கிறார்கள் என்பதை தெரிவித்துக் கொள்கிறோம். பணிகள் நடைபெறுவதை கண்காணித்து வருகிறோம். இதே போல் பழையபேட்டை பொது மயானம் துப்புரவு செய்தல், அங்கேயும் நீர் தேக்கத் தொட்டி அமைத்துத்தர திருநெல்வேலி சட்டமன்ற உறுப்பினர் திரு. A.L.S லெட்சுமணன் அவர்களிடம் விண்ணப்பம் அளித்து கேட்டுக் கொண்டிருக்கிறோம். பேட்டை நூற்பாலை வளாகத்தை ஜவுளி பூங்காவாக பயன்படுத்திட சட்டமன்றத்தில் நமது நியாயமான கோரிக்கையினை கொண்டு செல்ல வேண்டியிருக்கிறோம். நமது கோரிக்கையின் மீது அரசின் கவனத்தை ஈர்க்க வேண்டி ஆலை முன்பாக 07-08-2018 அன்று தர்ணா நடத்த திட்டமிடப்பட்டிருக்கிறது.

### சங்கக் கட்டிடம்

திருமணத் தகவல் மையம் மற்றும் சங்க அலுவலகம் வாடகை கட்டிடத்தில் இயங்கிவருகிறது. சங்கத்திற்கென டவுண், பாட்டப்பத்து, பாளையங்கோட்டை பகுதியில் சங்க அலுவலகம் அமைப்பதற்கான நடவடிக்கையை மேற்கொண்டு வருகிறோம். திருமணத் தகவல் மையம் தமிழ் மாநிலம் முழுமைக்கும் ஒருங்கிணைக்கும் பணி தலைமைச் சங்கத்தால் செய்யப்படவிருக்கிறது. திருநெல்வேலி மாவட்டம் முழுமைக்கும் நமது நகர திருமணத் தகவல் மையம் மட்டும் இணைக்கப்படும் ஆலோசனை உள்ளது. எனவே திருநெல்வேலி மாநகரப்பகுதியில் சங்கத்திற்கான நிரந்தர கட்டிடம் அமைப்பது இன்றையத் தேவையாக உள்ளது. இதற்கான நடவடிக்கைகளில் சங்கம் தொடர்ந்து முயற்சி செய்து வருகிறது. ஒத்துழைப்பு நல்க வேண்டுகிறோம்.

"மக்கள் வெற்றியெல்லாம் சங்க மேன்மையிலே உண்டு
சங்கங்களால் நல்ல சங்கங்களால் - மக்கள்
சாதித்தல்கூடும் பெரும் பெருங்காரியம்
அங்கம் கொள்க அதில் அங்கம் கொள்க - எனில்
அன்பினை மேற்கொண்டு முன்னின்று உழைத்திட"
பாவேந்தர் பாரதிதாசன் பாடலை நினைவு கூர்வோம்
ஒன்று படுவோம் - முன்னேறுவோம்
வாழ்க செங்குந்தம்! வளர்க செங்குந்தர் ஒற்றுமை!

வாழ்துக்களுடன்
நிர்வாகக் குழுவினர்

**நமது சங்க ஆண்டு நிகழ்வுகள் – நினைவிற் கொள்க**

1. ஜுலை – ஆகஸ்ட் (ஆடி) மாதம் ஞாயிறு காலை பொதுக் குழுவும், மாலை பேரணியுடன் சங்க ஆண்டு விழா - மாணவ/மாணவிகளுக்கு ஊக்கப் பரிசு தனித்திறன் போட்டிப் பரிசு, கல்வி உதவித் தொகை – சமுதாயப் பெரியவர்கள் சிறப்பித்தல்.
2. ஆகஸ்டு மாதம் 25ம் நாள் – திருமுருக கிருபானந்த வாரியார் சுவாமிகள் அவதார தின விழா
3. மாணவ/மாணவிகள், தொழில் முனைவோர், இளைஞர், மகளிர் திறன் மேம்பாடு தொடர்பான கருத்தரங்கம், பயிலரங்கம். (தலைமைச் சங்க வழிகாட்டுதல் படி)
4. நம் குலச் சான்றோர்கள் பிறந்தநாள் விழாக்கள்.
5. நமது பகுதியில் சேவை மனப்பான்மையிலான அமைப்புகளுடன் நாமும் இணைந்து நடத்தும் கருத்தரங்கம் – பயிலரங்கம் – மருத்துவ முகாம் மற்றும் சிறப்பு நிகழ்ச்சிகள்

அவ்வப்போது அறிவிக்கப்படும் இந்த நிகழ்ச்சிகளை நினைவிற் கொண்டு மேற்படி நிகழ்ச்சிகளில் பங்கு கொண்டு பயனடையுமாறு அன்புடன் கேட்டுக் கொள்கிறோம்.



**மாணவ மாணவிகள் பெற்றோர்கள் கவனத்திற்கு**

XII ஆவது X ஆவது தேர்வு முடிவு வெளிவந்து, மதிப்பெண் பட்டியல் கிடைக்கப் பெற்றவுடன் மேற்படி பட்டியல் நகலுடன், முழுமையான முகவரி மற்றும் அலைபேசி எண்ணுடன் **ஜுன் மாதம் 10ம்** தேதி க்குள் விண்ணப்பிக்கவும்.

தொழிற்கல்வி, பட்டயப் படிப்பு பயிலும் தகுதியான முதலாண்டு மாணவர்களும் 11ம் வகுப்பு பயிலும் மாணவ/மாணவிகளும் கல்வி உதவித் தொகை வேண்டி விண்ணப்பத்தினை **ஜுன் மாதம் 15ம்** தேதி க்குள் விண்ணப்பிக்கவும். ஏற்கனவே உதவித் தொகை பெற்ற பட்டயப்படிப்பு இரண்டாம் ஆண்டு, மூன்றாம் ஆண்டு மாணவர்கள் கடந்த தேர்வு மதிப்பெண் சான்றுகளுடனும், கல்லூரி முதல்வரின் பரிந்துரையோடு **ஜுன் 15ம்** தேதி க்குள் விண்ணப்பிக்க வேண்டும். எல்லா தேர்வுத் தாளிலும் தேர்ச்சி பெற்று 60 விழுக்காடுக்கு மேல் மதிப்பெண் பெற்றவர்களுக்கு மட்டுமே கல்வி உதவித் தொகை வழங்கப்படும்.

தகுதியான மாணவ மாணவர்கள் தென்னிந்திய செ.ம.ஜ.சங்கம். மற்றும் தொண்டு மன்றம் மூலம் கல்வித் தொகை பெற நமது துணைத்தலைவர் தேசிய நல்லாசிரியர் திரு. S. நெல்லையப்பன் அவர்களை தொடர்பு கொள்ள கேட்டுக் கொள்ளப்படுகிறார்கள்.

**வேண்டுகோள்**

- தலைமைச் சங்கத்தின் ஆயுள் உறுப்பினராகுங்கள். ரூ.100 செலுத்தி படிவம் பெற்றுக் கொள்ளுங்கள்
- செங்குந்த மித்திரன் ஆயுள் சந்தாதாரராகுங்கள். 2019 பிப்ரவரி முதல் ரூ.1000.
- ஆண்டு தோறும் ஜுலை மாதம் ரூ.1000 வழங்கி சங்கப் புரவலராக இணைந்து கொள்ளுங்கள்.
- சங்க நிகழ்வுகளுக்கு தங்களால் இயன்ற நன்கொடைகளை ஆண்டுதோறும் ஜுலை மாதம் வழங்குங்கள்.
- சங்க நிகழ்ச்சிகளில் தாங்களும், குடும்பத்தாரும் தவறாது கலந்து கொள்ளுங்கள். சங்க நிகழ்வுகளைக் கேட்டுத் தெரிந்து கொள்ளுங்கள்.

## இறுதி பயண வாகன சேவை

இளைஞர் அணியினர் மூலம் இறுதிப்பயண வாகன சேவை செய்யப்படுகிறது. ஓட்டுநர் உரிமம் பெற்ற உறவிர்கள் அவ்வப்போது இந்த சேவையில் ஈடுபடுமாறு அன்புடன் கேட்டுக்கொள்ளப்படுகிறார்கள். இறுதிப் பயன வாகன பொறுப்பு திரு . G. அங்கப்பனிடம் ஒப்படைக்கப்பட்டு வாகன பராமரிப்பு பணிகள் செய்யப்பட்டு வருகிறது. ஆண்டுதோறும் நடைபெறும் ஆண்டு விழாவில் வாகன சேவையில் ஈடுபடும் அனைவரும் பாராட்டப்பட்டு வருகின்றார்கள்.

"அன்னதானம் பசியைப் போக்கும்
கண்தானம் விழியைக் காக்கும்
உறுப்பு தானம் ஊண் காக்கும்
உயிரோடனைத்தையும் காக்கும் - இரத்த தானம்"

**சேவை செய்வோம் – சேவை செய்வோருக்கு உதவிடுவோம்**

## மேற்கொள்ள வேண்டிய நடவடிக்கைகள்

1. திருநெல்வேலி மாநகரத்தில் வசிக்கும் செங்குந்தர் குடும்பங்களின் விபரம் சேகரித்தல், தலைமைச் சங்க ஆயுள் உறுப்பினர் சேர்க்கை (ரூ.100/-), செங்குந்த மித்திரன் இதழ் சந்தா சேர்க்கை (ரூ. 1000/-), சங்கப் புரவலர் சேர்க்கை போன்றவற்றில் முழுக்கவனம் செலுத்தப்பட வேண்டும்.

2. நமது மாணவ/மாணவிகளுக்கான திறன் வளர்ப்பு கருத்தரங்கம், இளைஞர் மகளிருக்கான பயிலரங்கம், வேலை வாய்ப்பு தொடர்பான ஆலோசனை முகாம் முதலியவற்றில் தலைமைச் சங்கம் மூலம் நமது உறவு கல்வியாளர்கள், தொழில் முனைவோர்களைக் கொண்டு திட்டமிட்டு நடத்தப்படவேண்டும்.

3. நமது உறவினர்கள், சங்கம் நடத்தும் பொறியியல் தொழில் நுட்ப கல்லூரிகள், கலைக் கல்லூரிகள், மருத்துவம்



சார்ந்த பட்டப்படிப்பு, வேலை வாய்ப்புக்கான பயிற்சி நிறுவனங்களில் நமது மாணவர்கள் சேர்ந்து பயன்பெற வேண்டும், அதனை ஊக்குவிக்க வேண்டும். தொழில் சார்ந்த பணிகளை மேற்கொள்ளும் நமது உறவினர்களையும் அவர்கள் நிறுவனங்களையும் முன்னுரிமையாக தேவையான பணிகளுக்கு அமர்த்திடுவோம், சாமான்கள் வாங்கிடுவோம். உறவைப் பெருக்கிடுவோம்.

4. மூடப்பட்டுள்ள பேட்டை கூட்டுறவு நூற்பாலை வளாகத்தை ஜவுளிப் பூங்காவாக மாற்றுதல், பழையபேட்டை நெசவாளர் கூட்டுறவு சங்கத்தைப் புதுப்பித்து இயங்கச் செய்தல் தொடர்பான தொடர் நடவடிக்கைகளில் கவனம் செலுத்த வேண்டும்.

5. திருநெல்வேலி கருப்பந்துறையில் உள்ள செங்குந்தர் வனத்தில் தண்ணீர் வசதி, பழையபேட்டை பொதுமயானத்திற்குத் துக்கத்திற்காக சென்று வருவோருக்கு குளிக்க மேல்நிலை நீர்த் தொட்டி அமைத்தல் போன்றவற்றில் மதிப்பிற்குரிய சட்டமன்ற உறுப்பினர்களை அணுகி விண்ணப்பம் கொடுக்கப் பட்டுள்ளது. தொடர் நடவடிக்கை மேற்கொள்ள வேண்டும்.

6. சங்கத்திற்கான நிரந்தரக் கட்டிடம் அமைப்பது இன்றைய தேவையாக உள்ளது.

மேலே சொல்லப்பட்ட அனைத்து நடவடிக்கைகளுக்கும் மாணவச் செல்வங்கள், இளைஞர்கள், பெற்றோர்கள், உறவினர்கள், நிர்வாகிகள், செயற்குழு உறுப்பினர்கள் அனைவரும் முழு ஒத்துழைப்பு நல்கிடவும் சேவை செய்திடவும் கேட்டுக் கொள்கிறோம்.

## சங்க நிகழ்வுகள்

### செயற்குழு கூட்டங்கள்

09-11-14, 28-02-15, 29-03-15, 24-05-15, 07-06-15, 21-06-15, 02-08-15, 18-10-15 15-11-15, 17-12-15, 27-12-15, 06-03-16, 05-06-16, 26-06-16, 04-09-16, 17-12-16, 05-02-17, 26-03-17, 21-05-17, 14-07-17, 4-08-17, 05-11-17, 04-03-18, 01-07-18.

### தலைவர் கலந்து கொண்ட நிகழ்வுகள்

மாவட்டக் கூட்டங்கள் :

| | | | |
|---|---|---|---|
| சங்கரன்கோவில் | 01-02-15 | கல்லிடை | 05-06-15 |
| சங்கரன்கோவில் | 06-06-16 | வீரவநல்லூர் | 13-06-15 |
| அம்பை | 05-07-15 | புதியம்புத்தூர் | 08-07-15 |
| சங்கரன்கோவில் | 23-07-15 | தென்காசி | 18-12-15 |
| கல்லிடை | 19-04-16 | தென்காசி | 22-04-16 |
| சிந்தாமணிபுளியங்குடி | 24-04-16 | சங்கரன்கோவில் | 04-06-16 |
| கல்லிடை | 22-08-16 | சங்கரன்கோவில் | 11-12-16 |
| தென்காசி | 11-01-17 | சங்கரன்கோவில் | 12-01-17 |
| சங்கரன்கோவில் | 28-10-17 | புளியங்குடி | 12-11-17 |
| இராஜபாளையம் | 7-4-18 | பாரதியார்நகர் | 29-4-18 |
| சங்கரன்கோவில் | 3-6-18 | | |

### தலைமைச் சங்க செயற்குழு

| | | | |
|---|---|---|---|
| பெருந்துவைதுடுப்பதி | 12-10-14 | சென்னை | 05-04-15 |
| திண்டுக்கல் | 18-07-15 | புதுச்சேரி | 10-10-15<br>11-10-15 |
| பாலக்காடு<br>கேரளா | 09-10-16 | ஜெயங்கொண்டம்<br>திருச்சி | 19-02-17 |
| சென்னை(தேர்தல்) | 18-03-17<br>19-03-17 | சென்னை | 28-05-17 |
| தருமபுரி | 24-9-17 | கோவை | 15-4-18 |

அனைத்து செயற்குழுவிலும் தலைவர் கலந்து கொண்டிருக்கிறார்.



## வாரியார் திருமணத் தகவல் மையம்

| | |
|---|---|
| ஆகஸ்ட் 14 - ஜூலை 15 | 214 ஆண் 61 பெண் வரன் பதிவு 487 நபர்கள் தகவல் மையத்திற்கு வருகை தந்து விபரம் சேகரித்து உள்ளனர். |
| ஆகஸ்ட் 15 - ஜூலை 16 | 192 ஆண் 41 பெண் வரன் பதிவு 500க்கும் மேற்பட்டவர்கள் தகவல் மையத்திற்கு வருகை தந்து விபரம் சேகரித்துள்ளனர். |
| ஆகஸ்ட் 16 - ஜூலை 17 | 192 ஆண் 135 பெண் வரன் பதிவு 500க்கும் மேற்பட்டவர்கள் தகவல் மையத்திற்கு வருகை தந்து விபரம் சேகரித்துள்ளனர். |
| ஆகஸ்ட் 17 - ஜூலை 18 | 155 ஆண் 92 பெண் வரன் பதிவு 500க்கும் மேற்பட்டவர்கள் தகவல் மையத்திற்கு வருகை தந்து விபரம் சேகரித்துள்ளனர். |

நமது தகவல் மைய விபரங்களைக் கொண்டு 69 திருமணங்கள் நடைபெற்றிருக்கிறது. தகவல் மையம் கூலக் கடைத் தெரு 61, 62 மாடியில் உறவினர் திரு. ஆ. கணேஷ் நாராயணன் பொறுப்பில் நடத்தப்பட்டு வருகிறது. பதிவு நன்கொடை ரூ.100/- புதுப்பித்தல் நன்கொடை ரூ.25/- செங்குந்தர்கள் அனைவரும் தகவல் மையத்தில் வரன் பதிவுகள் செய்து பயனடையுமாறு கேட்டுக்கொள்ளப்படுகிறார்கள். சங்க அலுவலகமும் கூலக்கடைத் தெரு 61, 62 மாடியில் இயங்கி வருகிறது.

V. அனுகிருபா பெற்றோர்களுடன் கலந்து கொள்ளச் செய்தோம். அவர்களுக்கு கல்விச் சேவை அறக்கட்டளை மூலம் பதக்கம் வழங்கி பாராட்டப்பட்டார்கள்.

19-3-17 அன்று சென்னையில் நடைபெற்ற தென்னிந்திய செங்குந்த மகாஜன சங்க நிர்வாகிகள் தேர்தலில் திரு. K.P.K. செல்வராஜ் அவர்கள் தலைவராகவும், கோவில்பட்டி திரு. K.S.செல்வராஜ் அவர்கள் பொதுச்செயலாளராகவும், குடியாத்தம் திரு. S. அருணோதயம் அவர்கள் பொருளாளராகவும் தேர்வு செய்யப்பட்டார்கள். நமது மண்டல துணைத் தலைவராக இராஜபாளையம் பொ. சக்தி மோகன் அவர்களும், செயலாளராக இராமநாதபுரம் அ. ராஜசேகரன் அவர்களும் தேர்வு செய்யப்பட்டார்கள்.

2-4-17 அன்று காலை 9 மணியளவில் பழையபேட்டை நடுத்தெருவில் உலக மகளிர் தின முதல் நிகழ்வாக பெண்களுக்கான விளையாட்டுப் போட்டிகள் நடத்தப்பட்டது. மாலை 4 மணிக்கு ஈரோடு செங்குந்தர் பொறியியல் கல்லூரி துணைப் பேராசிரியர் திரு. G. லில்லி அவர்கள் தலைமையில் செங்குந்தர் தெருக்களில் பேரணி நடைபெற்றது. 80 வயதுக்க மேற்பட்ட மகளிர்களுக்கு சால்வையணிவித்து மரியாதை செய்யப்பட்டது. பின்னர் அழகப்பபுரம் நடுத்தெருவில் அமைக்கப்பட்டிருந்த பொது அரங்கத்தில் G. ரெங்கநாயகி, குருபூர்ணத்தம்மாள், முனைவர் ந. உஷாதேவி, முனைவர் G. லில்லி மகளிரின் சிறப்பு மற்றும் கடமைகளை பற்றி சிறப்புரையாற்றினார்கள். சுருக்கெழுத்து தேர்வில் மாநில அளவில் முதலிடம் பெற்ற கீழப்பாவூர் செல்வி. அனுசுயாவுக்கு நினைவுப் பரிசும், முனைவர் பட்டம் பெற்ற G. லில்லிக்கு சிறப்புப் பரிசும், போட்டியில் வெற்றி பெற்ற மகளிருக்கு நினைவுப் பரிசும் வழங்கப்பட்டது. நிகழ்ச்சி முழுவதும் மகாஜன சங்க நிர்வாகிகள் ஆலோசனையுடனும், வழிகாட்டுதலின்படி மகளிரணியினர் சிறப்பாக நடத்தினார்கள்.

12-6-17 அன்று திருநெல்வேலி மாவட்ட அறிவியல்



இயக்கம் ஜங்ஷன் ம.தி.தா. இந்துக் கல்லூரி மேனிலைப் பள்ளி வளாகத்தில் நடத்திய இளைஞர்கள் மாணவர்களுக்கான "வருங்காலங்களில் இளைஞர்கள்" கருத்தும் காட்சியும் என்ற கருத்தரங்கத்திற்கு பாவேந்தர் பாரதிதாசன் கல்வி அறக்கட்டளை உதவி செய்ததோடு நமது மாணவ/மாணவிகளையும் கலந்து கொள்ளச் செய்தோம்.

2-7-17 அன்று அ/மி திரிபுர சுந்தரி அம்பாள் நலக்கூடத்தில் வைத்து மாணவ/மாணவிகளுக்கான தனித்திறன் போட்டி நடத்தப்பட்டது. கலந்து கொண்ட மாணவர்கள் அனைவருக்கும் பரிசு வழங்கப்பட்டது.

16-7-17 காலை 11 மணியளவில் அ/மி திரிபுரசுந்தரி அம்பாள் சமுதாயக் கூடத்தில் வைத்து நடந்த கலந்தாய்வு கூட்டத்தில் தலைவர் திரு. பழ. மாணிக்கவாசகம் அவர்கள் தென்னிந்திய செங்குந்த மகாஜன சங்கத்தின் தோற்றம், முன்னாள் தலைவர்கள், நமது ஊர் சங்க தோற்றம், வளர்ச்சி, செங்குந்தர் சிறப்பு, நமது கடமைகள் பற்றி தெளிவாக எடுத்துரைத்தார்கள்.

அன்று மாலை 5 மணியளவில் செங்குந்தர் தெருக்களில் கல்வி எழுச்சிப் பேரணி நடைபெற்றது. பேரணியின் போது 80 வயதுக்கு மேற்பட்ட பெரியவர்களுக்கு சால்வை அணிவித்து மரியாதை செய்யப்பட்டது. பேரணி முடிவில் செங்குந்தர் வேம்படித் தெருவில் அமைக்கப்பட்டிருந்த தெய்த்திரு. புரவலர் S. பிச்சையா செங்குந்தர், தெய்வத்திரு. ந. முத்தரசு செங்குந்தர் நினைவு திறந்தவெளி அரங்கில் சங்க ஆண்டு விழா தலைவர் திரு. பழ. மாணிக்கவாசகம் தலைமையில் நடைபெற்றது. விழாவில் தென்மண்டலத் தலைவர் திரு. பொ. சக்தி மோகன் அவர்களும், இளைஞரணி அமைப்பாளரும் மாவட்டச் செயலாளருமான சங்கரன்கோவில் திரு. P. மாரிமுத்து, பொருளாளர் கல்லிடை திரு. S.சுப்பிரமணியன் தலைமைச் சங்க செயற்குழு உறுப்பினர்கள் புளியங்குடி PPK. பிச்சையா, சுப்பலாபுரம் S. கல்யாண சுந்தரம், அம்பை A.S. சுப்பிரமணியம் அவர்களும் கலந்து கொண்டு மாணவ/மாணவிகளுக்கு ஊக்கப்பரிசு, திறன் போட்டிப் பரிசு, கல்வி

வாரியார் சுவாமிகள் அவதார தினவிழா திருமுறை பாடப்பட்டும், சொற்பொழிவு நிகழ்த்தப்பட்டு சுவாமிகளுக்கு ஆராதனை செய்யப்பட்டு 500 நபர்களுக்கு மேல் அன்னதானம் வழங்கப்பட்டது.

6-9-15 ஞாயிறு காலையில் பழையபேட்டை நிவேதிதா மெட்ரிக் மேல்நிலைப் பள்ளியில் வைத்து செங்குந்தர் மகளிரணி கருத்தரங்கம் நடைபெற்றது. கருத்தரங்கத்தில் நமது தலைவர். திரு. K.P.K. செல்வராஜ் துணைவியாருடன் கலந்து கொண்டு மகளிரின் கருத்துக்களை தொகுத்து சிறப்பானதொரு உரை நிகழ்த்தினார்கள். மாலை 4 மணியளவில் 2000 உறுப்பினர்கள் கலந்துகொண்ட கல்வி எழுச்சிப் பேரணி தலைவர் அவர்கள் தலைமையில் நடத்தப்பட்டது.

இரவு 6 மணியளவில் அழகப்பபுரம் நடுத்தெருவில் தெய்வத்திரு. அருணாச்சலம் செங்குந்தர் திறந்தவெளி நினைவரங்கத்தில் சங்க ஆண்டுவிழா சிறப்பாக நடத்தப்பட்டது. விழாவில் X, XII, ஆவது வகுப்பில் உயர்மதிப்பெண்கள் பெற்ற மாணவ/மாணவிகளுக்கும், தனித்திறன் போட்டியில் வெற்றி பெற்ற மாணவ/மாணவிகளுக்கும் பரிசுகள் வழங்கப்பட்டது. தொழிற்படிப்பு பயிலும் மாணவ/மாணவிகளுக்கும் கல்வி உதவித் தொகை வழங்கப்பட்டது. பாரதிதாசன் அறக்கட்டளை மூலம் 1 to 5 வகுப்பு மாணவர்களுக்கான நினைவுத்திறன் புத்தகம் வெளியிடப்பட்டது. பல துறைகளில் நமது சான்றோர்கள் பாராட்டப்பட்டார்கள். இந்த விழா தலைமைச் சங்கம் மூலம் நடத்தப்படவுள்ள மாநில மாநாட்டிற்கு முன்னோடியாக அமைந்திருந்தது என கலந்து கொண்ட தலைவர் K.P.K. செல்வராஜ், மகளிரணி அமைப்பாளர் டாக்டர் திருமதி. வசந்தா சுத்தானந்தம் மண்டலப் பொறுப்பாளர்கள் தண்டபானி, பாலசுப்பிரமணியன், மாவட்டச் செயலாளர் P. மாரிமுத்து மற்றும் நிர்வாகிகள் பாராட்டினார்கள். ஒருநாள் நிகழ்ச்சி முழுவதும் ஒலி ஒளிப் பதிவுசெய்து கேசட் அனைத்து மாவட்டங்களுக்கும் அனுப்பப்பட்டது.



17-12-15 அன்று மாலை 6 மணியளவில் நடுத்தெரு அ/மி திரிபுரசுந்தரி அம்பாள் நலக்கூடத்தில் வைத்து செங்குந்தர் நெசவாளர் எழுச்சிப் பேரணி மாநாடு குறித்த விளக்க கூட்டம் நடைபெற்றது. தலைவர் திரு. K.P.K. செல்வராஜ் இளைஞரணி அமைப்பாளரும் மாவட்டச் செயலாளருமான திரு. P. மாரிமுத்து தஞ்சை இளைஞரணி துணை அமைப்பாளர் மணிகண்டன் அவர்களும் மாநாட்டின் அவசியம் மற்றும் நமது ஒற்றுமையை நிரூபிக்கும் வண்ணம் அனைவரும் சேலத்தில் 31-1-16 அன்று கலந்து கொள்ள வேண்டுமெனவும் கேட்டுக்கொண்டார்கள். இந்நிகழ்வில் பேட்டை கூட்டுறவு நூற்பாலையை ஜவுளிப் பூங்காவாக மாற்ற வேண்டும். பழையபேட்டையில் மூடப்பட்ட நமது கைத்தறி நெசவாளர் கூட்டுறவு சங்கத்தை இயக்க வேண்டும். செங்குந்தர்களுக்கு பிற்படுத்தோர் பட்டியலில் உள் ஒதுக்கீடு வழங்க வேண்டுமென நமது தலைவர், பழ. மாணிக்கவாசகம் அவர்களால் கோரிக்கை வைக்கப்பட்டு மாநாடு தீர்மானம் இயற்ற கேட்டுக்கொள்ளப்பட்டது.

இந்நிகழ்வில் இறுதி பயண வாகன சேவை சமுதாயப் பணி ஆற்றிவரும் இளைஞர்களையும் இளைஞர் அணித் தலைவர் திரு. A. சுப்பிரமணியன், கென்னடி இரத்தான கழகம் பொறுப்பாளர் திரு. ஹரி அவர்களும் 20 தடவைகளுக்கு மேல் தானாக இரத்த தானம் வழங்கிய நமது உறவினர்கள் 19 பேருக்கு தலைவர் அவர்களால் நினைவுப் பரிசு வழங்கி பாராட்டப்பட்டார்கள்.

27-12-15 அன்று பழையபேட்டை நிவேதிதா மெட்ரிக் மேல்நிலைப்பள்ளியில் வைத்து பாரதிதாசன் கல்வி அறக்கட்டளை மற்றும் சென்னிமலை MPNMJ பொறியிற் கல்லூரி இணைந்து மாணவ/மாணவிகளுக்கான இலவச வழிகாட்டி நிகழ்ச்சி சிறப்பாக நடைபெற்றது. 145 மாணவ/மாணவிகள் பெற்றோர்கள் கலந்து கொண்டனர். நிகழ்ச்சியில் கல்லூரி தாளாரும் மகளிரணி அமைப்பாளருமான Dr. வசந்தா

## நிர்வாகிகள்

### மகாஜன சங்கம்

| | | |
|---|---|---|
| தலைவர் | பழ. மாணிக்கவாசகம் | 9486400884 |
| செயலாளர் | மா. பாடகலிங்கம் | 9486291077 |
| பொருளாளர் | சுபா. சங்கர் | 9442138412 |
| அமைப்புச் செயலாளர் | S.N. சரவணன் | 9976649066 |
| துணைத்தலைவர்கள் | ச. நெல்லையப்பன் | 9443969642 |
| | S. இராமமூர்த்தி | 9976617395 |
| | க. செந்தில் | 9994612732 |
| துணைச்செயலாளர்கள் | சோலைமணியன் | 9092340181 |
| | ச. சங்கர் | 9894685395 |
| | சு. ஜெய்சங்கர் | 9894173232 |

### இளைஞரணி

| | | |
|---|---|---|
| தலைவர் | சுமங்கலி முருகானந்தம் | 9843048451 |
| செயலாளர் | V.M. ஆனந்த் | 7200832111 |
| பொருளாளர் | S. முருகன் | 9688335233 |
| துணைத்தலைவர் | ப. சுடலை | 9750305450 |
| துணைச்செயலாளர்கள் | S. ஸ்ரீநிதி சங்கர் | 9629305430 |
| | S. பழனிவேல் முருகன் | 9488929742 |
| வாகன பொறுப்பு | G. அங்கப்பன் | 9842103364 |

### மகளிரணி

| | | |
|---|---|---|
| தலைவர் | R. முத்துலெட்சுமி | 9626457257 |
| செயலாளர் | A. கஸ்தூரி | |
| பொருளாளர் | V. சங்கரவடிவு | 9162948230 |
| துணைத்தலைவர் | P. மீனா | 9487738412 |
| | B. அமிர்தம் | 9438871997 |
| மகளிரணி ஆலோசகர் குழு தலைவர் | K. பாக்கியலெட்சுமி | 9626451257 |
| மகளிரணி ஒருங்கிணைப்பாளர் | J. இராஜேஸ்வரி | 9489190689 |



29-7-16 அன்று மகளிரணி நிருவாகிகள் உள்ளிட்ட 14 மகளிர்கள் ஆயத்த ஆடைகள் தயாரிக்கும் புதியம் புத்தூருக்கு அழைத்துச் சென்று அங்கு நம் உறவுகள் நடத்தும் ஆயத்த ஆடைகள் தயாரிப்பு நிலையங்களைப் பார்வையிட்டும் தயாரிப்பாளர்களோடும், பணி செய்வோர்களிடமும் கலந்துரையாடி தொழில் பற்றி தெரிந்து கொள்ளச் செய்தோம்.

25-8-16 அன்று வேம்படித் தெரு ஸ்ரீ தில்லையானந்தம் விநாயகர் கோவிலில் வைத்து நமது சங்க குலகுரு திருமுருக கிருபானந்த வாரியார் சுவாமிகள் அவதார தின விழாவினை பஜனை, சொற்பொழிவு, திருமுறை பாடப்பட்டு சிறப்பாக நடத்தப்பட்டது. அன்று 500க்கும் மேற்பட்டவர்களுக்கு அன்னதானம் வழங்கப்பட்டது.

மகளிருக்கான ஆலோசனைக் கூட்டங்கள் நடத்தப்பட்டு அவர்களாகவே தையலகம் திறக்க உதவிள் செய்யப்பட்டது. கட்டடித்திற்ான வாடகை முன்பணத்திற்கு உறவினர்களிடமிருந்து பண உதவிகள் பெறுவதற்கு உதவிகள் செய்யப்பட்டது. 5-9-16 அன்று வேம்படித் தெருவில் வாடகை கட்டிடத்தில் மகளிரணியினரால் "நெல்லை மகளிர் தையலகம்" திறக்கப்பட்டது.

12-9-16 அன்று மாவட்ட ஆட்சித்தலைவர் அவர்களிடம் மூடப்பட்டுள்ள பேட்டை கூட்டுறவு நூற்பாலை வளாகத்தை ஜவுளி பூங்காவாக அமைத்து அனைத்து நெசவாளர்களுக்கும் பயன்படுத்தும் வகையில் உற்பத்தி விற்பனை முதலியவற்றிற்கு ஷ நெசவாளர் கூட்டுறவு சங்கத்தைப் புதுப்பித்து இராட்சச கட்டிடத்தறியும் தளவாள சாமான்கள் மற்றும் நிதியுதவி செய்ய வேண்டி தமிழக அரசைக் கேட்டுக் கொண்டும் விண்ணப்பம் அளிக்கப்பட்டது.

24-12-16 அன்று காலை பழையபேட்டை நிவேதிதா மெட்ரிக் மேனிலைப் பள்ளியில் வைத்து ஈரோடு சென்னிமலை

சுத்தானந்தன், கல்லூரி ஆலோசகர் முனைவர் திரு. R. பாலசுப்பிரமணியம் பேராசிரியர். சபாபதி, மோகன் ஆகியோர் மாணவ/மாணவிகளுக்கு நல்ல கருத்துக்களையும் தேர்வில் அதிக மதிப்பெண் பெறுவதற்கான வழியையும் தெரிவித்தார்கள். இந்நிகழ்விற்கு பள்ளி தலைவர் திரு. S. முத்துக்குமாரசாமியும் நமது அன்பிற்குரிய ஆசிரியர் திரு. V. ராமன் அவர்களும் மிகுந்த உதவியாய் இருந்தனர்.

31-1-15 அன்று சேலத்தில் நடைபெற்ற செங்குந்தர் நெசவாளர் பேரணி மற்றும் மாநாட்டில் நமது கிளையிலிருந்து 122 ஆண்கள் 93 பெண்கள் மொத்தம் 215 நபர்கள் மூன்று பேருந்துகளிலும், வேன் மற்றும் இதர வாகனங்களில் சென்று வந்தோம்.

13-3-16 அன்று காலை 8 மணியளவில் டவுண் செங்குந்தர் தெருக்களில் உலக மகளிர்தின பேரணி மகளிரணி அமைப்பாளர் திருமதி. Dr. வசந்தா சுத்தானந்தம் அவர்கள் தலைமையில் சிறப்பாக நடைபெற்றது. பேரணியின்போது 80 வயதுக்கு மேற்பட்ட பெண்களுக்கு சால்வை அணிவித்து மரியாதை செய்யப்பட்டது. பேரணி முடிவில் பெரியதெரு இரட்டை விநாயகர் செங்குந்தர் நல அரங்கில் வைத்து செங்குந்தர் மகாஜன சங்கம், பாரதிதாசன் கல்வி அறக்கட்டளை திருநெல்வேலி டுவின் சிட்டி சுழற்கழகம், பாளை ஸ்டார் அரிமா சங்கம், மற்றும் பிருந்தாலாய அறக்கட்டளை இணைந்து நடத்திய இலவச சித்த மருத்துவ முகாமினை திருநெல்வேலி சட்டப்பணிகள் ஆணைக்குழு செயலர் மதிப்பிற்குரிய நீதிபதி. திருமதி. J. தமிழரசி அவர்கள் துவக்கி வைத்து சிறப்புரையாற்றினார்கள். முகாமில் 248 பேர்கள் பயன்பெற்றனர்.

நமது சங்கம், பாவேந்தர் பாரதிதாசன் கல்வி அறக்கட்டளை மூலம் 17-7-16 ஞாயிறு காலை உசைனியா பள்ளியில் வைத்து மாணவ/மாணவிகளுக்கான தனித்திறன் போட்டி நடைபெற்றது. இப்போட்டியில் 124 மாணவ/மாணவிகள் கலந்து கொண்டனர். அனைவருக்கும் நினைவுப்பரிசு வழங்கப்பட்டது.

24-7-16 ஞாயிறு காலை 10 மணியளவில் நடுத்தெரு அ/மி திரிபுரசுந்தரி அம்பாள் நலக்கூடத்தில் வைத்து சங்கப் பொதுக்குழு நடைபெற்றது. பொதுக்குழுவில் சங்கத்தின் மகாஜன சங்கம், இளைஞரணி, மகளிரணி நிர்வாகிகள் செயற்குழு உறுப்பினர்கள் ஒருமனதாக தேர்வு செய்யப்பட்டார்கள்.

மாலை 4 மணியளவில் செங்குந்தர் தெருக்களில் 400 பேர்கள் கலந்துகொண்ட கல்வி எழுச்சிப் பேரணி நடைபெற்றது. பேரணி முடிவில் நடுத்தெருவில் அமைக்கப்பட்டிருந்த தெய்வத்திரு. புரவலர் A. சிதம்பரம் செங்குந்தர் நினைவு திறந்தவெளி அரங்கில் தலைவர். பழ. மாணிக்கவாசகம் தலைமையில் ஆண்டுவிழா சிறப்பாக நடைபெற்றது. விழாவில் மாவட்டச் செயற்குழு உறுப்பினர் திரு. சக்திவேல் அவர்களும் கலந்து கொண்டு சிறப்பித்தார்கள். விழாவில் சேரன்மகாதேவி ஸ்காடு காலேஜ் ஆப் இன்ஜினியர் கல்லூரி துணை முதல்வர் திரு. ஞான சரவணன் அவர்களும் கல்வியாளரும் சமூக ஆர்வலருமான சென்னை EKT. சிவக்குமார் அவர்களும் சிறப்பு விருந்தினர்களாக கலந்து கொண்டு மாணவ/மாணவிகளுக்கு ஊக்கப்பரிசு, திறன் போட்டிப் பரிசுகள் நிதி உதவித்தொகை வழங்கியும் சான்றோர்களையும், இலங்கையில் நடைபெற்ற ஆசிய வலுதூக்கும் போட்டியில் 4 வெள்ளி பதக்கங்கள் பெறற நமது உறவினர் அன்வு என்கிற ராமகிருஷ்ணன் அவர்களையும் பாராட்டி நினைவுப்பரிசு வழங்கி சிறப்புரையாற்றினார்கள். நிகழ்ச்சி முழுவதும் வெகு சிறப்பாக அமைந்திருந்தது என எல்லோராலும் பாராட்டப்பட்டது.

உதவித்தொகை வழங்கி சிறப்புரையாற்றினார்கள். நம் குலச்சான்றோர்களை திரு. S. சிததிர சபாபதி. திரு. S. நெல்லையப்பன், திரு. R. குணசீலன், திரு. S. பாலசுப்பிரமணியம், திரு. S. கணபதி, திரு. T. ஆறுமுகம் ஆகியோர் பாராட்டி நினைவுப் பரிசு வழங்கினார்கள்.

பாரதிதாசன் கல்வி அறக்கட்டளை மூலம் முனைவர் நெல்லை திரு. க. சுப்பிரமணியம் அவர்கள் தொகுத்து வழங்கிய "வியப்பும் விகடமும்" நூலும், திருநெல்வேலி மாநகர செங்குந்தர் தொழில் முனைவோர் வியாபார விபரக் கையேடு இளைஞர் அணியினர் மூலம் வெளியிடப்பட்டது. நிகழ்வு முழுவதும் சிறப்பாக இருந்ததாக வந்திருந்த சிறப்பு விருந்தினர்கள் மற்றும் பெரியோர்களால் பாராட்டப்பட்டது.

25-08-17 அன்று பாட்டப்பத்து ஒட்டக்கூத்தர் தெருவில் வைத்து திரு. முருக கிருபானந்த வாரியார் சுவாமிகள் அவதார தின விழா - சிறுமியர்கள் கோலாட்டமும், பெண்களும் பஜனை தேவாரப் பாடல்கள் பாடியும் பேரணி தெருக்களில் வலம் வந்தது. பேரணி முடிவில் வாரியார் சுவாமிகளுக்கு சிறப்பு ஆராதனை செய்யப்பட்டது. ஆன்மீகச் செம்மல்கள் திரு. சித்திரை சபாபதி அவர்களும் தலைவர் பழ. மாணிக்கவாசகமும் வாரியார் சுவாமிகளைப் பற்றி விரிவாக பேசினார்கள். 300 மக்களுக்கு அன்னதானம் வழங்கப்பட்டது. பொருளாளர் திரு. சுபா சங்கர், பத்திரகாளியம்மன் கோவில் நிர்வாகஸ்தார்கள் விழாவினை சிறப்பாகச் செய்திருந்தனர்.

08-10-17 அன்று திருப்பூரில் நடைபெற்ற நமது தலைவர் திரு. K.P.K. செல்வராஜ் அவர்களின் மணிவிழாவிற்கு நம் ஊரிலிருந்து 14 பேர்கள் சென்று, நினைவுப்பரிசு வழங்கி வந்தோம். 12-11-2017 அன்று புளியங்குடி செங்குந்தர்கள் சங்கத்தால் கட்டப்பட்ட திருமண மண்டபம் திறப்பு விழாவிற்கு நம் ஊர்களிலிருந்து 9 பேர்கள் சென்று, நினைவுப்பரிசு வழங்கி வந்தோம்.

15-04-2018 அன்று பாட்டப்பத்தில் வைத்து உலக மகளிர்தினக் கொண்டாட்டங்கள் - காலையில் சிறுமியர்



பெண்களுக்கான விளையாட்டுப் போட்டிகள், மாலையில் சிறுமியர்கள் கோலாட்டமடித்து முன்பு செல்ல மகளிர் பேரணி - பேரணியின் போது 80 வயதுக்கு மேற்பட்ட மகளிரை வணங்கி பொன்னாடை அணிவித்து வாழ்த்து பெறப்பட்டது. மாலையில் மருத்துவர் மற்றும் பேராசிரியர்கள் கலந்து கொண்ட சிறப்பான கருத்தரங்கமும் நடத்தப்பட்டது. அன்றைய நிகழ்ச்சி முழுவதும் வெகு சிறப்பாக அமைந்திருந்தது. அந்தப்பகுதி உறவினர்கள் முழுமையாக கலந்து கொண்டது மிகச்சிறப்பு.

29-04-18 அன்று சுத்தமல்லி பாரதியார் நகரில் செங்குந்தர் மகாஜன சங்கத்தின் கட்டிட திறப்பு விழாவிற்கு நமது ஊரிலிருந்து 15 நபர்கள் சென்று விழாவில் கலந்து கொண்டோம். நமது கிளைச் சங்கத்திலிருந்து அவர்கள் சங்கத்திற்கு ஒரு ஸ்டீல் பீரோவும் (ரூ.3000/-) பிருந்தாலயா அறக்கட்டளை நிறுவனரும் நமது உறுப்பினருமான திரு. தி. ஆறுமுகம் அவர்கள் கணினியையும் பரிசாக வழங்கினோம். சிறிய சங்கத்தினால் சிறப்பான விழா எடுத்திருந்தது, சங்கத்திற்கு சொந்த கட்டிடம் அமைத்திருப்பதை நாம் கவனத்திற்கு கொண்டு, நமது சங்கத்திற்கும் நிரந்தர கட்டிடம் அமைக்க முயற்சிகள் எடுக்க வேண்டும்.

03-06-2018 அன்று சங்கரன்கோவிலில் நடைெற்ற செங்குந்தர் முன்னேற்ற சங்கம் நடத்திய விழாவிற்கு நமது ஊரிலிருந்து 9 நபர்கள் சென்று வந்தோம்.

15-07-2018 ஞாயிற்றுக்கிழமை காலை 10 மணியளவில் நடுத்தெரு ஸ்ரீ திரிபுரசுந்தரி அம்பாள் சமுதாய நலக் கூடத்தில் வைத்து திருநெல்வேலி பேட்டை கூட்டுறவு நூற்பாலை வளாகத்தை ஜவுளி பூங்கா, தொழிற்பூங்கா, திறன் மேம்பாட்டு மையம் ஆக பயன்படுத்திட அரசின் கவனத்தை ஈர்க்க நடத்த உள்ள கோரிக்கை முழக்க கொண்டாட்டம் தொடர்பாக ஆலோசனை கூட்டம் நடத்தப்பட்டது. அன்று மாலை 6 மணியளவில் அதே அரங்கில் நமது உறவு மாணவ/மாணவிகளுக்கு ஊக்கப்பரிசு, கல்வி உதவித்தொகை வழங்குதல், சேவைச் சான்றோர்களுக்குப் பாராட்டு

MPNMJ பொறியியற் கல்லூரி, பாவேந்தர் பாரதிதாசன் கல்வி அறக்கட்டளை இணைந்து மாணவ/மாணவிகளுக்கான கல்வி வழிகாட்டி நிகழ்ச்சி நடைபெற்றது. 80 மாணவ/மாணவிகள் கலந்து கொண்டனர். கல்லிடை, அம்பையிலிரந்த மாணவ/மாணவிகளை சங்கப் பொறுப்பாளர்கள் அழைத்து வந்திருந்தார்கள். நிகழ்ச்சியில் கல்லூரி தாளாளரும் மகளிரணி அமைப்பாளருமான டாக்டர் திருமதி. வசந்தா சுத்தானந்தன் அவர்களும் கல்லூரி ஆலோசகரும் தொண்டு மற்ற செயற்குழு உறுப்பினருமான Dr. R. பாலசுப்பிரமணியம் அவர்களும் கலந்து கொண்டு மாணவ/மாணவிகளுக்கு நல்ல கருத்துக்களை வழங்கினார்கள். கலந்து கொண்ட மாணவ/மாணவிகள் அனைவருக்கும் கல்லூரி சார்பில் கல்வி உதவித் தொகையும் மதிய உணவும் வழங்கப்பட்டது.

22-1-17 அன்று சங்கரன்கோவிலில் வைத்து செங்குந்த மகாஜன சங்கத்திற்கான மாவட்டத் தேர்தல் நடைபெற்றது. நமது கிளையின் மாவட்டப் பொதுக்குழு உறுப்பினர்களான பழ. மாணிக்கவாசகம், மா. பாடகலிங்கம், சுபாசங்கர், ச. நெல்லையப்பன், S.N. சரவணன், சோலை மணியன், திருமதி. J. இராஜேஸ்வரி கலந்து கொண்டனர். நமது மாவட்டத்தின் 18 கிளைச்சங்க செயற்குழு உறுப்பினர்கள் கலந்து கொண்ட பொதுக்குழுவில் மாவட்ட நிர்வாகிகள், தலைமைச் சங்க செயற்குழு உறுப்பினர்கள் ஒருமனதாக தேர்வு செய்யப்பட்டார்கள்.

| | | |
|---|---|---|
| மாவட்டத் தலைவர் | திரு. பழ. மாணிக்கவாசகம்<br>திருநெல்வேலி | 9486400884 |
| மாவட்டச்செயலாளர் | திரு. P. மாரிமுத்து<br>சங்கரன்கோவில் | 9842126568 |
| பொருளாளர் | திரு. S. சுப்பிரமணியன்<br>கல்லிடை | 9360692540 |



**தலைமைச் சங்க செயற்குழு உறுப்பினர்கள்**

| | | |
|---|---|---|
| திரு. PPK. பிச்சையா | புளியங்குடி | 9976012094 |
| திரு. S. கல்யாணசுந்தரம் | சுப்புலாபுரம் | 9677048102 |
| திரு. A.S. சுப்பிரமணியன் | அம்பை | 9842153994 |

**மாவட்டத் துணைத் தலைவர்கள்**

| | | |
|---|---|---|
| திரு. M. ராஜகோபால் | அம்பை | 9442062714 |
| திரு. G. சுப்பிரமணியன் | அம்பை | 9442062714 |
| திரு. C.S. பிச்சையா | சிந்தாமணி | 9445709984 |
| திரு. S. சங்கரன் | கல்லிடை | 9367178177 |
| திரு. A. சங்கரன் | தென்காசி | 9842796068 |

**மாவட்டத் துணைச் செயலாளர்கள்**

| | | |
|---|---|---|
| திரு. சோலைமணியன் | நெல்லை | 9099340181 |
| திரு. ஆ. சுப்பிரமணியன் | இடைகால் | 9488704648 |
| திரு. A. அண்ணாதுரை | வீரவநல்லூர் | 9345145494 |
| திரு. P. மாணிக்கம் | சாம்பவர் வடகரை | 9944457170 |
| திரு. P. ராஜாமணி | பாரதியார்நகர் | 9965970976 |

**மாவட்ட மகளிரணி அமைப்பாளர்**

| | | |
|---|---|---|
| திருமதி. J. இராஜேஸ்வரி | நெல்லை | 9489170689 |

5-2-17 அன்று மாலை 6 மணியளவில் ஸ்ரீ தில்லையானந்தம் விநாயகர் கோவிலில் வைத்து நடைபெற்ற கூட்டத்தில் மாவட்ட நிர்வாகிகளாக தேர்வு செய்யப்பட்ட திரு. பழ. மாணிக்கவாசகம், திரு. சோலை மணியன், பாரதியார் நகர் திரு. P. ராஜாமணி, மாவட்ட மகளிரணி அமைப்பாளர் திருமதி. J. இராஜேஸ்வரி மற்றும் நடுத்தெரு. திரு. சண்முக சுந்தரம் மகன் S. ரமேஷ் Phd. டாக்டர் பட்டம் பெற்றமைக்காகவும் பாராட்டி சிறப்பிக்கப்பட்டார்கள்.

19-3-17 அன்று அம்பையில் நடைபெற்ற தொண்டுமன்ற பொதுக்குழுக் கூட்டத்தில் 2016ம் ஆண்டு X, XII, ஆவது அரசு பொதுத் தேர்வில் முதல்நிலை வந்த மாணவன் R. ரமேஷ்குமார், மாணவி S. உமா கிருத்திகா, இரண்டாம் நிலை வந்த மாணவி

## செங்குந்தர் மகாஜன சங்கம்
### திருநெல்வேலி மாநகரம்
### தகவலேடு - 8

2014 ஆகஸ்ட் முதல் - 2018 ஜூலை முடிய

அன்பிற்கினிய உறவினர்களே!

அன்பு வணக்கம். தாங்களும் தங்கள் குடும்பத்தாரும் எல்லா நன்மைகளும் பெற்று சிறப்புடன் வாழ நம் குலக் கடவுள் செந்தூர் முருகனை வேண்டுகிறோம்.

செங்குந்தர் பெரியதெரு அ/மி இரட்டை விநாயகர் செங்குந்தர் சமுதாய நல அரங்கில் வைத்து 27-7-14 அன்று சங்க ஆண்டு விழா சிறப்பாக நடைபெற்றதற்குப் பின்னர் 2014, 2015, 2016,2017,2018 ஜூலை முடிய உள்ள காலத்திற்கான நமது சங்கப்பணிகளை மற்றும் நிகழ்வுகளை இந்த தகவலேடு மூலம் பகிர்ந்து கொள்வதில் பெருமகிழ்ச்சியடைகிறோம்.

25-8-14 அன்று பெரியதெரு அ/மி இரட்டை விநாயகர் செங்குந்தர் சமுதாய நல அரங்கில் வைத்து திருமுருக கிருபானந்த வாரியார் சுவாமிகள் அவதார தினவிழா. திருமுறை பாடப்பட்டுட்டும் சுவாமிகளைப் பற்றி சொற்பொழிவு நிகழ்த்தப்பட்டும் ஆராதனை செய்யப்பட்டு 500 பேருக்கு மேல் அன்னதானம் வழங்கப்பட்டது.

31-8-14 அன்று தன்னார்வ தொண்டு அமைப்புகள், வேணுவனம் சுழற்கழகம், பிருந்தாலாய அறக்கட்டளை, தெய்வத்திரு. சுப்பிரமணியன் குடும்பத்தார் மற்றும் நமது சங்கமும் இணைந்து சர்க்கரை நோய் விழிப்புணர்வு முகாம் நடத்தப்பட்டது. நமது உறவிர்கள் 184 பேர் பயனடைந்தனர்.

4-10-14 அன்று டெல்லியில் திருப்பூர் குமரன் பேரவை மூலம் பொறுப்பாளர் திரு. S.N. சரவணன் மற்றும் நமது கிளை இளைஞர்கள் மாற்றுத் திறனாளிகளைக் கொண்டு திருப்பூர் குமரனைப் பற்றிய வீதி நாடகம் நடத்தப்பட்டும், திருப்பூர் குமரனின் சிலை பார்லிமெண்ட் வளாகத்தில் வைத்திட



வேண்டியும் அவரது பிறந்த நாளை அரசு விழாவாகக் கொண்டாட வேண்டுமெனவும் வலியுறுத்தி பிரதமர் அலுவலகத்தில் வேண்டுகோளும் அளிக்கப்பட்டது.

27-12-14 அன்று நமது சங்கம், வேணுவனம் சுழற்கழகம், பிருந்தாலாயா அறக்கட்டளையுடன் இணைந்து மாணவ/மாணவிகளுக்கான தலைமைப் பண்பு பயிலரங்கம் நடத்தப்பட்டது. நமது மாணவர்கள் 27 பேர் கலந்து கொண்ட பயன் பெற்றனர்.

8-3-15 அன்று நமது சங்கமும் பிருந்தாலாயா அறக்கட்டளையும் இணைந்த நமது மகளிரணி மூலம் 600 பெண்கள் கலந்து கொண்ட உலக மகளிர் தினம் பேரணி பெரியதெரு, நடுத்தெரு, வேம்படித்தெரு வழியாக நடத்தியும் முடிவில் பெண்களுக்கான இலவச மருத்துவ முகாமினையும் நடத்தினோம். 206 பெண்கள் பயன் பெற்றனர். தென்னிந்திய செங்குந்த மகாஜன சங்க மகளிரணி அமைப்பாளர் திருமதி. டாக்டர் வசந்தா சுத்தானந்தம் அவர்கள் தலைமையேற்று சிறப்பித்தார்கள்.

18-4-15 அன்று நமது சங்கமும், வேணுவனம் சுழற்கழகம், பிருந்தாலாயா அறக்கட்டளை இணைந்து ஒருநாள் உயர்கல்வி வழிகாட்டுதல் கருத்தரங்கம் நடத்தப்பட்டது. 96 மாணவ/மாணவிகள் கலந்து கொண்டனர். மருத்துவம், பொறியியல், கலை, தணிக்கைத் துறை, சுற்றுலா, சமையற்கலை துறைகளைச் சார்ந்த கல்வி நிறுவனங்களின் சான்றோர்கள் மாணவர்களுக்கு வழி காட்டினர்.

23-8-15 அன்று உசைனியா ஆரம்பப்பள்ளியில் வைத்து நமது மாணவ/மாணவிகளுக்கான தனித்திறன் போட்டி நடத்தப்பட்டது. கலந்துகொண்ட அனைவருக்கும் பரிசும் சான்றிதழும் வழங்கப்பட்டது.

25-8-15 அன்று பழையபேட்டை அழகப்பபுரம் நடுத்தெரு பஜனை மடத்தில் வைத்து திருமுருக கிருபானந்த

# செங்குந்தர் கடமைகள்

1. ஒவ்வொரு செங்குந்தர் குடும்பத்திலும் உள்ள ஆண் பெண் அனைவரும் அவர்கள் வசிக்கும் பகுதியில் உள்ள கிளைச் சங்கத்தின் அடிப்படை உறுப்பினராக வேண்டும்.
2. ஒவ்வொரு செங்குந்தர் வீட்டிலும் செங்குந்த மித்திரன் மாத இதழ் இருப்பது செங்குந்தருக்கு பெருமை. எனவே செங்குந்த மித்திரன் ஆயுள் சந்தாதாரராக வேண்டும்.
3. தலைமைச் சங்கம் வலுப் பெற்றிட தலைமைச் சங்கத்தின் ஆயுள் உறுப்பினர் ஆகவேண்டும்.
4. நம் குல இளைஞர்கள் தொழிற்கல்வி பெற்றிட பாவேந்தர் பாரதிதாசன் அறக்கட்டளைக்கு நம் வீட்டுத் திருமணம் மற்றும் மங்கள நிகழ்ச்சியின் போது தாராளமாக நிதி உதவி அளித்திட வேண்டும்.
5. பெண் கல்வியை பேணுகிற சமுதாயம் தான் முன்னேறும் எனவே நம் குலப் பெண் குழந்தைகளைக் குறைந்தது 12-வது வகுப்பு வரையாவது படிக்க வைத்திட வேண்டும். அவர்களுக்கு தேவையான பயிற்சியினை அளித்திட வேண்டும்.
6. ஆடம்பரமான திருமணங்களைத் தவிர்த்துச் சிக்கன முறையில் ஒரே நாள் திருமணமாக நடத்திட வேண்டும்.
7. நம்குல முன்னோர்கள் தேடி வைத்தப் பொதுச் சொத்துக் களைப் பாதுகாத்து நம்குல முன்னேற்றத்திற்கு பயன்படுத்த வேண்டும்.
8. நம் குல இளைஞர்கள் குறைந்த முதலீட்டில் நிறைந்த வருமானம் தரும் புதிய புதிய சிறு தொழில்களில் ஈடுபட வேண்டும்.
9. நம் குல வரலாற்றையும் பெருமையையும் சிறப்பையும் எடுத்துக் கூறும் செங்குந்தர் பிரபந்தத் திரட்டு நூலை அனைவரும் வாங்கிப் படிக்க வேண்டும்.
10. உயிரிலும் மேலான ஒழுக்கத்தினைக் காத்து ஏழை எளியவர்களுக்கு உதவிகள் செய்து நம் குலத்திடையே நல்லுறவினை வளர்த்திட வேண்டும்.

தெ.இ.செ.ம.ச.

# ஓர் அமைப்பு வளர நெறிமுறைகள்

1. அந்த அமைப்பின் விதிகளை அறிந்து கொள்ளுங்கள்
2. ஆக்கம் தரும் ஆலோசனைக் கூறுங்கள்
3. இழிவாகப் பிறரிடம் பேசாதீர்கள்
4. ஈதல் சிறப்பென்று அளியுங்கள்
5. உரிமைக் கோரும்முன் கடமைகளைச் செய்யுங்கள்
6. ஊக்கம் இல்லையேல் ஒதுங்கிவிடுங்கள்
7. எடுத்தும் செய்வோரைத் தூற்றாதீர்கள்
8. ஏற்கும் பதவியைப் பொறுப்புடன் வகியுங்கள்
9. ஐயமிருந்தால் நேரில் தெளிவு பெறுங்கள்
10. ஒரு கூட்டமும் போகத் தவறாதீர்கள்
11. ஓர்மைக்கு ஊறு செய்யாதீர்கள்
12. ஔவியம் (பொறாமை) பேசாதீர்கள்

"என்னருந்தமிழ் நாட்டின் கண்
எல்லோரும் கல்வி கற்றுப்
பன்னருங் கலை ஞானத்தால்
பராக்கிரமத்தால் அன்பால்
உன்னத இம மலை போல்
ஓங்கிடும் கீர்த்தியெய்தி
இன்புற்றார் என்று மற்றோர்
இயம்படக் கேட்டிடல் எந்நாளோ"

- பாவேந்தர் பாரதிதாசன்

வெங்கடேஷ் ஆப்செட். திலி. டவுண். செல் : 9894685395